REGD. No. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை: மார்கழி 11உ வியாழன் (26—12—57) ★ ★ வெளியூர்: மார்கழி 12உ வெள்ளி (27—12—57) [இதழ் 167

## சுயஆட்சி கோரி கிளர்ச்சி

டார்ஜிலிங், டிச. 25—

இங்கு வந்த பண்டித நேருவுக்கு, மக்கள் மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்பு அளித்தனராம்; ஆனால், அதேபோது 'டார்ஜிலிங் பிரதேசத்திற்கு, பிரதேச சுயஆட்சி வேண்டும்' என்றும் அமைதியாகக் கிளர்ச்சி நடத்தினராம்!

கடந்த சில நாட்களாகவே, பிரதேச சுதந்தரம் வேண்டுமென்பதுபற்றிப் பல இரகசியக் கூட்டங்கள் நடைபெற்றிருக்கின்றன. பண்டித நேரு வருகையின்போது, பிரதேச சுயஆட்சி கோரும் சுவரொட்டிகள் நாடெங்கும் ஒட்டப்பட்டிருந்தனவாம்!

# பண்டித நேருவின் நாத்துடுக்கை அடக்க தமிழர்களால் முடியும்

## கருப்புக்கொடி காட்ட என்னால் படை அனுப்ப இயலும்

## பெரியார் இதை அனுமதிக்க வேண்டுமே!

### மனிதப்பண்பை இழந்து துவேஷத்தைக் கக்குகிறது 'கல்கி' பத்திரிகை

### தமிழ் நாட்டு அரசியலை சாக்கடையாக்க முயலாதீர்

### அண்ணாவின் உருக்கமான வேண்டுகோள்

சென்னை 12-வதுவட்ட தி. மு. க. கிளை சார்பில் 21-12-57 மாலை நடந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில் கலந்துகொண்டு சொற்பொழிவாற்றுகையில் அண்ணா அவர்கள், நேருவின் நாத்துடுக்கை அடக்க தி. மு. கழகத்திடம் சக்தி இருந்தும் அதைப் பயன்படுத்தமுடியாதநிலை ஏற்பட்டுள்ளதைக் குறிப்பிட்டுவிட்டு, பெரியாருக்கு தண்டனையை அதிகரிக்கவேண்டும் என்று துவேஷ விதை தூவுவோருக்கு எச்சரிக்கை தந்தார்; அதன் விவரம் அடியில் தரப்பட்டிருக்கிறது :—

"நாட்டின் தலைவர் உயர்ந்த தரத்தில் உள்ளவரா, அல்லது மட்டரகத்தைச் சேர்ந்தவரா என்பதைத் தெரிந்துகொள்ள, இது போன்ற ஒரு நெருக்கடியான நேரம் வரும். அப்படி வரும் பொழுதுதான் ஆத்திரப்படாமல நடந்துகொள்ளவேண்டும், நாட்டின் பெரிய தலைவர்கள் என்பவர்கள்! பொறுமையிழந்து ஆத்திரப்பட்டு, 'சாக்கடை பாஷை'யில் நேரு பேசுவதென்றால், இது பெரிய மனிதருக்கு அழகல்ல ஆகையால், ஒருவருடைய பேச்சினாலேதான் உயர்ந்த மதிப்புக்குக் குந்தகம் ஏற்பட்டுவிடுகிறது.

"நாட்டிலுள்ள எல்லா மக்களும் கேட்கச் சகிக்காமல், 'பெரிய மனிதர் இப்படிப் பேசலாமா?' என்று கேட்கக்கூடிய நிலையிலே நேரு பேசியிருக்கிறார்; தாறுமாறாகத் திட்டினார் நேரு என்பதை, சின்னஞ்சிறு பையன் கூட தெரிந்துகொள்ளக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிட்டது.

"பெரியார் என்ன சொன்னார்? 'என்னுடைய நாட்டில்வந்து என்னைத் திட்ட இந்தக் காலிப் பயல் நேருவுக்கு என்ன உரிமையிருக்கிறது?'—என்று கேட்டுவிட்டார். நேரு புகழா வாங்கிக் கட்டிக்கொண்டுபோனார், திட்டியதால்?

"நேரு, கடுஞ்சொற்களால் நம்மைத் தாக்கியதற்கு நாம் கண்டனம் தெரிவித்தாக வேண்டும். அவருடைய தாறுமாறான சொற்களை அவர் வாபஸ் வாங்கவேண்டும். அவர் வாபஸ் வாங்கவேண்டுமென்று நாம் கிளர்ச்சி நடத்தினால் அது காமராசரைப் பாதிக்கும்.

"நேரு வருகிற 5-ந் தேதி தமிழ்நாட்டுக்கு வருகிறார்; அவர் வரும்போது பல்லாயிரக் கணக்கானவர்கள் கருப்புக் கொடி காட்டலாம். அதற்கு படை என்னால் அனுப்பிவைக்க முடியும். பல்லாயிரம் பேர் சிறை சென்றோ, தடியடி தாங்கிக் கொண்டோ கருப்புக்கொடி காட்ட முடியும். ஆனால், அப்பொழுதும் காமராசரின் போலீஸ் வந்துதான் நம்மைத் தாக்கும். அந்த நேரத்திலும்கூட காமராசரைக் கண்டிக்க முடியாது என்று சொன்னால் என்னால் கண்டிக்காமலிருக்க முடியாது

"என்னால் பெரியாரை விடுவிக்க முடியும்; இன்றோ, நாளையோ பெரியார் ஒரு சொல் சொல்லட்டும்; ஒரு ஜாடை காட்டட்டும்; பெரியார் திருச்சி சிறையில்கூட இல்லை; சென்னை சிறையில் தானிருக்கிறார். அவரிடம் தோழர்கள் போய் இதைச் சொல்லட்டும் இதுவரை இந்தியத்துணைக்கண்டமே பார்த்திராத அளவுக்கு—ஏற்காத தண்டனையையும் ஏற்றுக் கொண்டு கருப்புக் கொடி காட்ட ஏற்பாடு செய்கிறேன். நான் அரசியலில் நாகரீகத்தை விரும்புகிறேன். நீங்கள் (பெரியார்) விருப்பு வெறுப்புக்களை விரும்புகிறீர்கள்.

"நேருவின் நாத்துடுக்கை அடக்க தமிழர்களால் முடியும்; அந்தத் திறமையை தி. மு. கழகம் இழந்துவிடவில்லை; ஆனால், நாம் கிளர்ச்சி நடத்தியதனாலேயே இழுக்குப்பட்டு விட்டதாகக்கூடச் சொல்லுவார்கள், திராவிடர் கழகத் தோழர்கள்!

"காமராசரைப் பதவியிலிருந்து விரட்டிவிட்டால் பிறகு ஆச்சாரியார் வந்து அந்த இடத்திலே உட்கார்ந்து விடுவாரே என்பதற்காகத்தான், 'உனக்கு நான் ஆதரவு தருகிறேன்; நீ செய்வதைச் செய்; அதைப் பொறுத்துக்கொள்கிறேன்'' என்று காமராசரைப் பார்த்து பெரியார் கூறுகிறார். அவருடைய காரியம் எதுவும் கெட்டுவிடாது; அதற்கு நான் உத்தரவாதம் தருகிறேன்.

"நாம் கிளர்ச்சி செய்கிறோம் என்று வைத்துக்கொள்ளுங்கள்; அதன்பிறகு திராவிடர் கழகத் தோழர்கள் என்ன சொல்வார்கள்? 'பெரியாரை சனவரி 26-ந் தேதியே விடுதலை செய்வதற்கு இருந்தார் காமராசர்; இந்தப் பாவிகள் கிளர்ச்சி செய்து காரியத்தைக் கெடுத்துவிட்டார்கள்' என்பார்கள்.

"வேண்டாத பெண்டாட்டி கால்பட்டால் குற்றம்—கைபட்டால் குற்றம்; சிரித்தால் குற்றம்—அழுதால் குற்றம் என்றால், என்ன செய்வது? கணவனுக்கு அவள் நெய்யை அதிகம் ஊற்றினால், 'அய்யோ, இவ்வளவு நெய்யை ஊற்றி சாமானைப் பாழாக்குகிறாளே' என்பதும், நெய்யைக் குறைத்து ஊற்றினால், 'கணவனுக்குக்கூட நெய் ஊற்ற மனமில்லையே இவளுக்கு' என்று சொல்லுவதும், இப்படி அவள் எதைச் செய்தாலும் அதிலே குற்றங் காணுவதும் எதைக் காட்டுகிறது? குடும்பத்தில் அவள் எவ்வளவு உண்மையுடன் உழைத்தாலும், அவள்மீது என்றும் சந்தேகம்பட்டுக் கொண்டிருந்தால் அவள் என்ன செய்வாள்; தற்கொலைதான் செய்துகொள்வாள்!

"அதைப்போல், நான் எதைச் செய்தாலும் சந்தேகத்துடன் பார்த்தால் நான் எங்கே போவது? எனவேதான், நான் உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்—'கருப்புக்கொடி காட்டக் கூடாது' என்று!

"திராவிடர் கழகத் தோழர்கள் எதையும் எண்ணிப்பார்க்க வேண்டும்; ஆனால் எண்ணிப்பார்க்கும் சக்தியை அவர்கள் இழந்து 8 ஆண்டுகள் ஆகின்றனவே!

"பெரியாருக்கு இந்த அளவு தண்டனை போதாது என்று சொல்லக்கூடிய அளவுக்கு ஈனத்தனமான எண்ணத்தைச் சிலர் வெளியிட்டு வருகின்றனர்; இதை தி. மு. கழகம் பொறுத்துக் கொள்ளாது.

"'பெரியார் அனுபவசாலியாக இருக்கலாம்; அவர் எவ்வளவு பெரியவராயிருந்த போதிலும், பிராமணர்களை குத்துவேன்—சொல்லுவேன் என்று சொன்ன பிறகும், அவருக்கு 6 மாதத் தண்டனைதான் 'கொடுக்கப்பட்டுள்ளது' அந்தத் தண்டனை போதாது; இன்னும் அதிகத் தண்டனை கொடுக்கும்படியாக அரசாங்கம் அப்பீல் செய்ய வேண்டும்' என்ற கருத்துப்பட 'கல்கி' பத்திரிகை தலையங்கம் எழுதியிருக்கிறது.

"'கல்கி'க்கு எந்த அளவுக்கு 'நல்ல மனம்' இருக்கிறது என்பதற்கு இது ஒன்று போதும், சான்று! மனிதனின் பண்பு எந்த அளவு மங்கி இருக்கிறது என்பதற்கு 'கல்கி' ஓர் எடுத்துக்காட்டு!

"பெரியாருக்குத் தீர்ப்பு வழங்கிய நீதிபதி, தனது தீர்ப்பிலேயே குறிப்பிட்டிருக்கிறார்—'குால் நடுக்கமெடுக்கக்கூடிய அளவுக்கு வயது முதிர்ந்து பலகீனமாகக் காணப்பட்டார் பெரியார்'—என்று!

"பெரியாரைப் பற்றி நீதிபதி இப்படிக் கூறுகிறார்; ஆனால், இங்கு 'கல்கி' பத்திரிகை ஆபீசில் சுழல் நாற்காலியில் அமர்ந்து கொண்டு, மின்சார விசிறியின் காற்றிலே மகிழ்ந்துகொண்டு தலையங்கம் எழுதுபவர் கூறுகிறார்—'தண்டனை போதாது'—என்று! அதை எழுதியவர் யாராயிருந்தாலும்—பகவத்கீதை படிப்பவரானாலும் சரி; எம். எஸ். சுப்புலட்சுமியின் கீதத்தை இரசிப்பவரானாலும் சரி—அவர் எவ்வளவு பெரிய மகாமேதையாக இருந்தாலும் சரி—இதை எழுதியதன் மூலம் அவர் தனது பண்பை இழந்துவிட்டார் என்றுதான் சொல்லுவேன்.

"பெரியார் அவர்கள் சிறையில் எத்தனைநாளைக்கு இருக்கிறாரோ அத்தனைநாளைக்கும் நாங்கள் வெட்கப்படுகிறோம்; துக்கப்படுகிறோம்.

"நாங்கள் அவர்கள் (பார்ப்பனர்கள்)மீது வைத்துள்ள அன்புதான் பெரியாரை விடுவிக்க வேண்டும் என்று சொல்வதற்குக் காரணம். ஆனால் இடையிலே அவர்கள் துவேஷத்தைத் தூவப் பார்க்கிறார்கள். 'கல்கி'யின் இந்தப் போக்கை நான் அனுமதிக்க மாட்டேன். நாங்கள் பெரியாரிடம் பகைத்துக்கொள்ளவேண்டுமென அவர்கள் எதிர்பார்க்கிறார்கள்.

"நாங்கள் பெரியாரை பகைத்துக்கொண்டால் தமிழ்நாட்டு அரசியல் சாக்கடையாகும் என்பதை 'கல்கி'க்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

"நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் திட்டிக்கொண்டால், பிறகு தமிழ்நாட்டு அரசியலில் 'காமன் பண்டிகை'தான் நடக்கும்; கடைசியில் அடிதடி சண்டையில் முடியும்; அப்படி அடித்துக் கொண்டால் எங்கள் இருசாராருக்கும் ஆயிரக்கணக்கான பணத்தை அள்ளிக் கொடுத்துத் தூண்டிவிடவும் ஆள் இருக்கிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும்.

"மட்டரகமாக எழுதுவதாலோ, தாக்குவதாலோ பிரச்சினை தீர்ந்துவிடாது. என்னை அவர்கள் அடக்கப்பார்க்கிறார்கள். என்னை அடக்கினால் இலாபம் யாருக்கு? யாரை கிரந்தமாக அடக்கவேண்டுமென்று நினைக்கிறார்களோ அவர்களுக்குத்தான் இலாபம்!

"எனவே, நாங்கள் சர்வ ஜாக்கிரதையாகவே இருப்போம். நாங்கள் அந்த அளவுக்கு மனதை

(4-ம் பக்கம் பார்க்க)

# இந்தியா இப்போதுதான் ஒரே நாடாகியிருக்கிறதாம்!

## பிரிவினை சக்திகளை வளரவிடக் கூடாதாம்!

### மந்திரி மொரார்ஜி தேசாய் கொக்கரிக்கிறார்

மதுரை, டிச. 24—

தி. மு. கழக இலட்சியம் பற்றி மத்திய மந்திரி மொரார்ஜி தேசாய், வேறெல்லா வடநாட்டவரையும்போலவே, அது ஒரு 'பிரிவினை கோஷம்' என்றே கருத்தறிவித்திருக்கிறார்.

மொழிப் பிரச்சினை பற்றி மதுரை நகரசபை வரவேற்பில் குறிப்பிடுகையில் அவர் கூறியதாவது :—

"இந்த நாட்டில், பிரிவினை கோருவோர் இருக்கிறார்கள்; இந்தப் பிரிவினை நேர்ந்தால் என்ன நிகழும்? நாடு மீண்டும் பிரிந்துபோகும். நாம் நாட்டை இழந்துவிடுவோம்; எனவே, இந்த முயற்சிகளை மக்களே முறியடிக்க வேண்டும்" என்று அவர் கருத்தறிவித்திருக்கிறார்!

"இப்போது நாடு ஒன்றாகி விட்டது; எந்தச் சக்தியும் இந்த நிலையைக் குழப்புவதற்கு அனுமதிக்கக்கூடாது.

"இந்தப் பிரிவினைச் சக்திகளை முளையிலேயே கிள்ளி விடுவதற்கு—மேலும் வளரவிடாமல் தடுப்பதற்கு—முழு மூச்சுடன், எங்களாலானதை எல்லாம் செய்வோம்" என்றும் மிரட்டியிருக்கிறார் அந்த மந்திரி!

## ஈ. வெ. கி. சம்பத் எம்.பி.

சென்னை, டிச. 26—

நமது கழக மக்கள் சபை உறுப்பினர் தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள் 24—12—57 மாலை டெல்லியிலிருந்து கிராண்டிரங்க் 'எக்ஸ்பிரஸ் மூலம் சென்னை வந்தடைந்தார்; நேற்று இரவு நாகர்கோவிலுக்குப் புறப்பட்டார்.

நம் நாடு
தி.மு.க.தினஇதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்
சென்னை 26—12—57 வியாழன்

# இரட்டைத் தாழ்ப்பாள்!

சோழ அரசனுக்கும் அரசியாருக்கும் ஊடல்; அரசியார் தன் அறைக் கதவைத் தாளிட்டுக்கொண்டு, அரசன், கதவைத் திறக்க வேண்டியபோதும் திறக்க மறுத்துவிட்டாள். இது கண்ட கவிஞர் ஒட்டக்கூத்தர், தம் கவிமூலம் அரசர்மீது அரசியார் கொண்டுள்ள சீற்றத்தை ஆற்றச்செய்து, கதவைத் திறக்க முயன்றார்.

கவிஞரின் கவி கேட்டு, சீற்றந் தணிவதற்கு மாறாக கோபம் கூடப்பெற்றவளாய், 'ஒட்டக்கூத்தர் பாட்டிற்கு இரட்டைத் தாழ்ப்பாள்' எனக் கூறிக்கொண்டே அரசியார், மற்றொரு தாழ்ப்பாளையும் போட்டாள். இப்படி ஒரு கதை தமிழ்நாட்டில் வழங்கப்பட்டு வருகிறது.

★

பேரரசின் ஆட்சி மொழி என்ற பெயரில், அரசியல் சட்டத்தில் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்ற பதினான்கு மொழிகளிலும் மிகமிக வளம் குன்றிப் பின்தங்கிக் கிடக்கின்ற இந்தி மொழியை, தென்னாட்டு மக்கள் மீது திணிக்கப்படும் தீவினை மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இதுவரை உலகப் பொது மொழியாக விளங்கிவரும்—வளமனைத்தும் அமைந்துள்ள ஆங்கில மொழியின் இடத்தில், இந்தி மொழி வலுக்கட்டாயமாக ஏற்றிவைக்கப்படும் பெரும் பிழையினையும் இந்தியப் பேரரசு வேண்டுமென்றே புரிந்துவருகிறது.

ஆங்கில மொழி திறம்பட ஆற்றிவரும் பணிகளில் குறிப்பிட்ட சிறிதளவு பணியினையும் ஒழுங்காக நிறைவேற்றக்கூடிய ஆற்றல் இந்தி மொழிக்குக் கிடையாது—அறவே கிடையாது என்பது மறுக்கமுடியாத உண்மை. இவ்வுண்மையைச் சுட்டிக்காட்டி, இப்பெரும் தவறினைக் கைவிடவேண்டும் என்று வேண்டிக்கொள்ள முனைந்தனர் நாட்டின் நல்லறிவாளர்கள் எனப்படுவோர்.

இதுவரை, இவ்வாறு இந்தித் திணிப்பை எதிர்த்துக் குரல் எழுப்பின நல்லறிவாளர்கள் அனைவரின் செயலையும் எள்ளி நகையாடி வந்தார், இந்தியப் பிரதமர் பண்டித நேரு அவ்வாறு நகையாடுவதுடனும் நில்லாது, எதிர்த்தவர் அனைவரையும் 'நாட்டின் நாசகாலர்கள்', 'கலகக்காரர்கள்', 'இந்தியாவின் ஐக்கியத்தைக் குலைக்கும் குணக்கேடர்கள்' என்றெல்லாம், துடுக்குத்தனமாக ஏசியும் வந்தார்.

எதிர்ப்பாளர்களை இப்படி ஏசிவரும் அதேநேரத்தில், இந்திமொழி அவசரப்படுத்தித் திணிக்கப்படமாட்டாது—இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டில்லாத மக்கள் மீது—அதாவது தென்னக மக்கள்மீது இந்தி கண்டிப்பாகத் திணிக்கப்படமாட்டாது—என்றெல்லாம் இதே பண்டித நேரு, ஆசை மொழியும் கூறிவந்தார்.

இது போன்றே, இந்தி மொழியை உடனடியாக ஆட்சி மொழி ஆக்கவேண்டும், அதை இந்தியத் துணைக்கண்டம் முழுவதிலும் உள்ள மக்கள் கட்டாயப் பாடமாகக் கற்பதற்கான ஏற்பாடுகளை உடனடியாக மேற்கொள்ளவேண்டும், எங்கும் இந்தி—எதிலும் இந்தி என்ற ஏற்பாடு இன்றே வேண்டும் எனப் பிதற்றிவரும் இந்தி வெறியர்களையும், வெறுத்துக் கண்டிப்பதுபோல் வெளிப்படையாகக் கண்டித்துவந்தார் இந்தியப் பிரதமர்.

இந்தி ஆதரவாளர்களையும், எதிர்ப்பாளர்களையும் ஒருசேர இந்தியப் பிரதமர் கண்டித்து வந்திருந்தபோதிலும், தென்னாட்டவர் எச்சரித்துக் கொண்டிருக்கின்ற பொழுதே, இந்தி மொழித் திணிப்பு, தீவிரப்படுத்தப்பட்டு வந்ததுடன் பரவலாக்கப்பட்டும் வந்தது. இன்றும் இதே நிலையில்தான் இந்தித் திணிப்பு இருந்துவருகிறது.

அரசியல் சட்டத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள பதினான்கு மொழிகளும் தேசிய மொழிகள்தான்; இது நீங்கலாக, இந்தி மொழிக்குத் தனிச்சிறப்பு எதுவும் கிடையாது; மற்ற மொழிகள், அது அது பேசப்பட்டு வரும் மாநிலங்களின் ஆட்சி மொழியாக இருப்பது போன்றே, இந்தியும் பேரரசின் ஆட்சிமொழியாகும்—என்றெல்லாம் இந்தி மொழியின் நிலை குறித்துத் தெளிவுபடுத்திப் பேசிவருவார் பண்டித நேரு.

ஆனால், அதே நேரத்தில், பேரரசின் ஆட்சி மொழியாக மட்டும் இந்தி இருக்கவில்லை. அது பாரதத்தின் தனிப்பெரும் தேசிய மொழி. அதற்கு இணையாக வேறு எம்மொழியையும் கருதக்கூடாது—கொள்ளக்கூடாது—என்றெல்லாம் பண்டிதருக்கு பதில் அளிப்பதேபோன்று, அவர் அமைச்சரவையில் அமைச்சராக இருந்து வருகின்றவர்களில் சிலர் கூறிவருவர்.

இம்முரண்பாடு குறித்து பிரதமர் முணுமுணுக்கவும்மாட்டார்—வாய்மூடிக் கிடப்பார்!

இந்த நிலையில், ஆங்கிலத்தின் இடத்தை வளமற்ற இந்தி மொழிக்கு அளிப்பதால் ஏற்படக்கூடிய கேடுகளை நன்கு உணர்ந்துள்ளதேபோல், இந்தி வெறியர்களின் ஆதிக்க வெறியின் தன்மையை, நன்கு பழகித் தெரிந்துகொண்டுள்ள இராசகோபாலாச்சாரியார், டாக்டர் சி. பி. இராமசாமி அய்யர், மிர்சா இஸ்மாயில், பேராசிரியர் இரத்தினசாமி, பொன்னம்பல தியாகராசன் போன்றவர்கள் பலர் ஒன்றுகூடி, பேரரசின் இந்தித் திணிப்பைக் கண்டித்தனர். ஆங்கில மொழியே நீடிக்கவேண்டும் எனத் தீர்மானித்தனர்.

அவ்வளவுதான்; இதுவரை என்றும் ஏற்பட்டில்லாத அளவிற்கு, பண்டித நேருவுக்குக் கோபம் ஏற்பட்டுவிட்டது. மேற்குறிப்பிட்ட பெரியவர்கள் அனைவரையும், உணர்ச்சிவயப்பட்டுவிட்டவர்கள் — இழுப்பு வலி கண்டவர்கள்போல் செயல்படுகிறார்கள்—இந்திப் பிரச்சினையை அவர்கள் அணுகும் முறை வியப்புக்குரியது—இவர்கள் செய்துகொள்ளும் கற்பனை முழு முட்டாள்தனமானது—இவர்கள் செய்கையால் இந்தியாவின் ஒற்றுமைக்கு ஊறு நேரிடும்— என்றெல்லாம் வெளுத்து வாங்கிவிட்டார் பண்டித நேரு—இல்லை—இந்தியப் பிரதமர்.

தாம் இந்தியப் பிரதமராக இருந்து வருகின்ற காரணத்தினாலேயே, இந்திப் பிரச்சினையை அணுகும் சரியான முறை தமக்கு மட்டுந்தான் தெரியும், இராசகோபாலாச்சாரியார் போன்றவர்களுக்குத் தெரியாது என்ற எண்ணத்தில் நேரு பண்டிதர் மிதந்துகொண்டு இருக்கிறார். மற்றவர்கள் இல்லாத தனி இடத்தில் தாம் இருந்துவருகின்ற ஒரு காரணத்தினாலேயே, 'இந்தித் திணிப்பு கூடாது; ஆங்கில மொழியே இருக்கவேண்டும்' என்று கோருகின்ற டாக்டர் சி. பி. இராமசாமி அய்யர் போன்ற முதிர்ந்த அனுபவசாலிகளின் வாயுரையை முழு முட்டாள்தனம் எனப் பண்டிதர் கூறி வருகின்றார் போலும்!

தென்னாட்டு மக்களின் இந்தி எதிர்ப்பு உணர்ச்சியைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளக்கூடியவரும், அதற்கான பரிகாரம் தேடக்கூடியவரும் வடநாட்டில் ஒருவரும் கிடையாது, பண்டிதரைத் தவிர—என்று, இராசகோபாலாச்சாரியார் பலமுறை குறிப்பிட்டு வந்திருக்கின்றார். அவ்வாறு தாம் குறிப்பிட்டுவந்திருப்பதுகூட நூற்றுக்கு நூறு தவறுடையது என்பதை, பண்டித நேருவின் இந்த முறை தவறிய பேச்சுக்குப்பிறகு, ஆச்சாரியார் நன்கு உணர்ந்துகொள்வார் என்றே நம்புகிறோம்.

தென்னாட்டின் மீது இந்தி மொழியைத் திணிக்கும் கருத்தில் ஒரு சாதாரண இந்தி வெறியனுக்கும், இந்தியப் பிரதமருக்கும் கடுகளவு மாறுபாடும் இல்லை என்ற உண்மையையும், இருக்கின்ற மாறுபாடு எல்லாம் அத்திணிப்பு குறித்து பேசப்படும் முறையிலதான் என்ற உண்மையையும் தமிழ் மக்கள் விளக்கமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்.

இந்தியை எதிர்ப்பது ஆச்சாரியார் அவர்களேயானாலும், வேறு மிக மிகச் சாமானியனேயானாலும், அவர்கள் இருவரையும் ஒன்றேபோல் கருதுவதும், அவர்கள் கூறும் கருத்தை ஒன்றேபோல் சிறுதுரும்பென மதிப்பதும் தமது இயல்பு என்ற உண்மையை நேரு பண்டிதர் தமது கண்டனப் பேச்சு மூலம் வெளிப்படையாக மெய்ப்பித்துவிட்டார். ஒட்டக்கூத்தர் பாட்டுக்கு சோழ அரசியால் இரட்டைத் தாழ்ப்பாள் போடப்பட்ட கதை போல, இராசகோபாலாச்சாரி போன்ற மூதறிஞர்களின் முயற்சிக்கும், முழு முட்டாள்தனம் என்ற தமது கைவசமுள்ள மகுடத்தைச் சூட்டிவிட்டார் பண்டித நேரு!

## 'இந்திமொழி வளமானதோ வளர்ச்சியுற்றதோ அல்ல'

### 'தேசிய மொழிக்கு இலக்கிய வளமோ கல்விச்செறிவோ தேவையில்லை'

### இந்தித் திணிப்புக்கு பண்டிதரின் வியாக்கியானம்

கல்கத்தா, டிச. 25—

"மற்ற இந்திய மொழிகளைவிட இந்தி மொழி சிறந்ததென்றோ வளர்ச்சி அடைந்தது என்றோ கருதி, இந்தியாவின் தேசிய மொழியாக அதைத் தேர்ந்தெடுக்கவில்லை!

"நிர்வாகத் தொடர்புக்கு ஆங்கிலத்திற்குப் பதிலாக நடைமுறையில் பயன்படுத்தும் நோக்கத்துடன்தான் அது தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

"தேசிய மொழியாக 'இந்தி'யை நிர்ணயிப்பதில் இலக்கியத்தைப் பற்றியோ, கல்வியைப் பற்றியோ கருத வேண்டியதில்லை; இது நிர்வாகத்துறை சம்பந்தமானது"

என்று பண்டித நேரு, அகில இந்திய எழுத்தாளர் மாநாட்டில் பேசுகையில், இந்தி' எந்த அடிப்படையில் 'தேசிய' மொழியாக்கப்பட்டுள்ளது என்பதைக் குறிப்பிடுகையில் வர்ணித்துள்ளார்.

'இந்தி'க்கு எந்தவிதத் தகுதி அம்சமும் இருப்பதாகக்கூட அவர் வருணிக்காதது குறிப்பிடத்தக்கது.

## அணுவிசைக் கப்பல்

### பிரிட்டனின் தீவிர முயற்சி

அணுவிசை சக்தியால் இயங்கும் வர்த்தகக் கப்பலை நிர்மாணிக்க பிரிட்டனில் முழு மூச்சுடன் ஆராய்ச்சி நடந்துவருகிறதாம்!

அணுவிசையினால் ஓடும் 'டிரெட்நாட்' என்ற நீர்மூழ்கி நிர்மாணிக்கப்படுவதாகவும், வெள்ளோட்டம் விடும் தேதியைப் பற்றி இப்போது கூறுவதற்கில்லை என்றும் காமன்ஸ் சபையில் கூறப்பட்டிருக்கிறது.

## இந்தியாவுக்கு பிரிட்டிஷ் விமானங்கள் ஏற்றுமதி

### விலை மதிப்புப் பற்றித் தகவல்

இவ்வாண்டு ஜனவரி—அக்டோபர் மாதங்களில் இந்தியாவுக்குத்தான், பிரிட்டிஷ் விமானங்கள் அதிக அளவில் ஏற்றுமதியாயிற்றாம்.

இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்ட விமானங்கள் மதிப்பு 55,31,220 பவுன்கள். அக்டோபர் மாத ஏற்றுமதி மட்டும் 13,59,274 பவுன்கள்.

## தேனீ வளர்ப்பு நிலையங்கள்

### ஒரு புள்ளி விவரம்

கல்லுப்பட்டி, டிச. 24—

கடந்த நான்கு ஆண்டுக்காலமாக நாட்டில், தேனீ வளர்ப்பதற்காக எடுத்துக்கொள்ளப்பட்ட முயற்சியில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்று கதர்-கிராமத் தொழில் குழுவின் தலைமை அதிகாரி சதாவாலா தெரிவித்துள்ளார்.

சென்னை, பம்பாய், உத்தரப் பிரதேசம், பஞ்சாப், திருவாங்கூர், மணிப்பூர், குடகு ஆகிய பகுதிகளில் மொத்தம் 25,000 நவீன தேனீ வளர்ப்பு நிலையங்கள் உள்ளன; 8,000 பேர் தேனீ வளர்ப்பதில் ஈடுபட்டுள்ளனர். இதுவரை இரண்டு இலட்சம் டன் தேன் உற்பத்தியாகியுள்ளதாம்.

கடந்த நான்கு ஆண்டுக்காலமாக இத்திட்டத்திற்கு ரூ 18·5 இலட்சம் உதவியளிக்கப்பட்டுள்ளதாம்.

1,800 கிராமங்களில் 257 நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளதுடன், 20 வட்டார அதிகாரிகளும் நியமிக்கப்பட்டுள்ளனராம்.

சென்ற ஆண்டில் 8 இலட்சம் டன் தேன் தயாரிக்கக்கூடும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது.

## 'வீட்டு வாடகைக் கோரிக்கை வாரம்'

சென்னை, டிச. 25—

சென்னை ஆசிரியர் நிறுவனம் 1958 பிப்ரவரி திங்களில் 'வீட்டு வாடகைக் கோரிக்கை வாரம்' கொண்டாட முடிவு செய்துள்ளது.

இந்த வாரத்தில் ஆசிரியர்கள், கோரிக்கை சின்னம் அணிந்துகொண்டு பணியாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனர்.

## 13,515 பேர் வேலை கோரினர்

### 1,991 பேர்களுக்கு வேலை அளிக்கப்பட்டதாம்!

### தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு வேலை தேடித்தரும் இலட்சணம்

புதுடில்லி, டிச. 14—

"அக்டோபர் இறுதியில், வேலை தேடித்தரும் நிறுவனத்தில் வேலை கோரியிருந்த தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் எண்ணிக்கை 83 968 ஆகும்; செப்டம்பர் மாத இறுதியில் அந்த எண்ணிக்கை 85 407 ஆகும்" என்று இந்திய சர்க்கார் செய்தி இலாகா மூலம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

அக்டோபர் மாதத்தில் பெயர்களைப் பதிவு செய்த 13,515 பேர்களில் 1.991 பேருக்கு வேலையளிக்கப்பட்டதென்றும், முந்திய மாதத்தில் அந்த எண்ணிக்கைகள் முறையே 18 308; 2184 ஆக இருந்ததென்றும் கூறப்படுகிறது.

## 1,100 நீராவிக் கப்பல் ஊழியர்கள் வேலை இழப்பராம்!

கல்கத்தா, டிச. 24—

பீகார் மாநிலத்திலிருந்து நீராவிக் கப்பல் மூலம் சரக்குகளை ஏற்றிச் செல்லும் நிறுவனம், வரும் சனவரித் திங்கள் முதல் மூடப்படுமாம். அதன் காரணமாக 1,100 ஊழியர்கள் வேலை இழக்கும் நெருக்கடி ஏற்பட்டுள்ளது என்று வங்க மாலுமிகள் சங்கத்தின் பொதுச்செயலாளர் தெரிவித்துள்ளார்.

பீகார் மாநிலத்திற்குள் இந்த நிறுவனம் நஷ்டத்தில் வேலை செய்வது உண்மை என்றாலும், மொத்தத்தில் நிறுவனத்திற்கு நஷ்டம் இல்லை என்று அவர் கூறியுள்ளார்.

இதன் காரணமாக இரயில்வேக்கு அதிக நெருக்கடி ஏற்படும் என்று மத்திய அமைச்சர் ஷா தெரிவித்துள்ளார்.

'பீகார் மாநிலத்தில் நதிகள் மூலம் போக்குவரத்து, குறைந்தது 6 மாதகாலத்திற்கு நீடிக்க வேண்டும்' என்று பீகார் கால்வாய் போக்குவரத்து குழு தெரிவித்துள்ளது.

## மோரிஸ் தீவு பள்ளிகளில் தமிழில் போதனை

மோரிஸ் தீவில் 173 ஆரம்பப் பள்ளிகள் உள்ளன; இவற்றில் 117 பள்ளிகளில் தமிழ், உருது, இந்தி மொழிகள் போதிக்கப்படுகின்றனவாம்.

அந்த உயர்நிலைப் பள்ளிகளிலும் இந்திய மொழிகள் போதிக்கப்படுகிறது; இவ்வாண்டில் அங்கு, கீழ்த்திசை மொழியாசிரியர்களின் எண்ணிக்கை அதிகரித்திருக்கிறது.

## 22½ இலட்சம் பவுன் மதிப்புள்ள ரயில் தளவாடம்

### இந்தியாவுக்கு பிரிட்டனிலிருந்து ஏற்றுமதி செய்யப்படுமாம்

1958-ல் 22,50,000 பவுன் மதிப்புள்ள இரயில் தண்டவாளங்களையும், துணைச் சாதனங்களையும் பிரிட்டன், இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்யும்.



## அமராவதி திட்டம்

### ரூ. 4 கோடி செலவிடப்படும்?

கோவை, டிச. 23—

கோவை மாவட்டத்தில் உடுமலை தாலுகாவில் டிசம்பர் 31-ம் நாளன்று, ரூ. 4 கோடி செலவில் திட்டமிடப்பட்டுள்ள அமராவதி திட்டத்தை மந்திரி அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரி துவக்கி வைப்பார் என்றும், விழாவிற்கு முதலமைச்சர் காமராசர் தலைமை வகிப்பார் என்றும் தெரியவருகிறது.

இந்தத் திட்டம் பயன்தரும் காலத்தில் 3,000 ஏக்கர் நிலத்தில் கரும்பு பயிரிடவும், 18,000 ஏக்கர் நிலத்தில் நெல் பயிரிடவும் தண்ணீர் வசதி கிடைக்குமாம்.

## வாயு மண்டலத்தில் புதிய சாதனை!

மாஸ்கோ, டிச. 25—

ராக்கெட் மூலம் வாயு மண்டலத்தில் 25 மைல் உயரம்வரை மனிதன் எவ்விதத் தீங்கும் நேரிடாவண்ணம் பிரயாணம் செய்யலாம் என்றும், பாரசூட்டில் நாய்களை வைத்து அனுப்பி இது சம்பந்தமாகப் பல முயற்சிகளை ரஷ்யா செய்து வெற்றி கண்டுள்ளதென்றும் கூறப்பட்டிருக்கிறது.

'அல்பினா' என்ற நாய், பாரசூட் மூலம் 125 மைல் உயரம் வரையில் சென்று ஆபத்தின்றி மீண்டும் இறங்கியிருக்கிறது என்றும் செய்திகள் கூறுகின்றன.

## 'பஞ்சாயத்துத் தலைவரை மக்களே நேரடியாகதேர்ந்தெடுக்கவேண்டும்'

### கோவிலடி பஞ்சாயத்து தீர்மானம்

17—12—57 மாலை 4 மணிக்கு, நடைபெற்ற கோவிலடி ஊராட்சிமன்ற அவசரக் கூட்டத்தில், பஞ்சாயத்துத் தலைவரை கிராமத்திலுள்ள வாக்காளர்களே நேரிடையாக (இரகசிய ஓட்டெடுப்பின் மூலம்) தேர்ந்தெடுப்பதுதான் சிறந்த முறையென்று ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## செயற்கை நில நடுக்கம்!

ரஷ்ய விஞ்ஞானிகள் செயற்கை நில நடுக்கம் ஒன்றை உண்டாக்கினர் என்று மாஸ்கோ வானொலி அறிவித்துள்ளதாம்.

உஸ்பெக் பாலைவனப் பகுதியில் 135 அடி ஆழத்தில் 1,000 டன் எடையுள்ள வெடி மருந்தை வைத்து வெடித்தார்களென்றும், 200 கெச பரப்பளவு நிலத்தில் நில நடுக்கம் ஏற்பட்டது என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

## மூன்றாவது துங்கபத்திரா மின்சாரத் திட்டம்

பெங்களூர், டிச. 23—

துங்கபத்திரா திட்டத்தின் கீழ் மூன்றாவது மின்சார உற்பத்தி நிலையத்திற்காக மைசூர் அரசாங்கம் ரூ. 50-இலட்சம் ஒதுக்கியுள்ளது. இங்கு 9,000 கிலோவாட் மின்சாரம் உற்பத்திசெய்ய திட்டமிடப்பட்டுள்ளது.

## ஆசிரியர்களுக்கு ஊதிய உயர்வு!

நாகபுரி, டிச. 25—

பல்கலைக் கழகங்களுடன் இணைக்கப்பட்டுள்ள கல்லூரிகளுக்கு பல்கலைக் கழக மானியக் குழு ரூ. 2 இலட்சம் ஒதுக்கியுள்ளது,

ஆசிரியர்களின் தரத்தையும், அந்தஸ்தையும் உயர்த்துவதற்குக் குழு, கால் பங்கு மானியம் அளிக்கும் என்றும் மானியக் குழுத் தலைவர் திரு. தேஷ்மும் தெரிவித்துள்ளார்.

இணைக்கப்பட்டுள்ள கல்லூரிகளில் ஆசிரியர்களின் ஊதியத்தை உயர்த்துவதன் காரணமாக ஏற்படும் செலவில் பாதித்தொகையை மத்திய அரசாங்கமும் ஏற்றுக்கொள்ளும் என்றும் அவர் கூறியுள்ளார்.

## டாக்டர் எஸ். தருமாம்பாள் பெண்கள் உயர் நிலைப்பள்ளி

### துவக்க ஏற்பாடுகள்

"சென்னை மணவழகர் மன்றச் சார்பில் பெத்துநாயக்கன்பேட்டையில் துவக்க இருக்கும் 'டாக்டர் எஸ். தருமாம்பாள் பெண்கள் உயர்நிலைப் பள்ளி'யை விரைவில் துவக்க, துரிதமான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

"பள்ளியின் நிர்வாகக் குழுவுக்கு பேராசிரியர் எஸ். ஜி. மணவாளராமானுஜம் (முன்னாள் துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்) அவர்கள் தலைமைவகித்து நடத்திக்கொடுக்க அன்புடன் இசைந்துள்ளார்கள்.

"நிர்வாகக் குழுவில் உறுப்பினராக இருக்க திரு. இரா. நெடுஞ்செழியன், பேராசிரியர் எம். கே. சண்முகம், தோழியர்கள் அலமேலு அப்பாத்துரை, வெற்றிச்செல்வி-அன்பழகன், சத்தியவாணிமுத்து எம். எல். ஏ., திரு. கண்ணதாசன், டாக்டர் பி. நடேசன், திரு. சி. என். மீனாட்சிசுந்தரம் முதலியார், திரு. த. கோ. சுந்தரனம், திரு. எம். குப்புசாமி ஆகியோர் அன்புடன் இசைந்துள்ளனர். நிர்வாகக் குழு சனவரி முதல் வாரத்திற்குள் கூடி நடைமுறைப் பணிகளை மேற்கொள்ளும்"

என, அமைப்பாளர் சிறுவை மோகனசுந்தரம் அறிவிக்கிறார்.

## சென்னை 4-வது வட்ட அண்ணா படிப்பக ஆண்டு விழா

### மு.கருணாநிதி, எஸ்.முத்து, ஜீவரத்தினம், தென்னரசு கலந்துகொண்டனர்

சென்னை, டிச. 25—

சென்னை 4-வது வட்டம் (வண்ணாரப்பேட்டை) அண்ணா படிப்பகத்தின் முதலாண்டு விழாப் பொதுக்கூட்டம் 22—12—57 மாலை சோலையப்பன் தெருவில் மிகச் சிறப்புற நடைபெற்றது.

கூட்டத்திற்குத் தோழர் கண்ணபிரான் தலைமை வகித்து, படிப்பகத்தின் பணிகளைப் பாராட்டியும், தி. மு. கழக இலட்சியங்களை விளக்கியும் முன்னுரையாற்றினார்.

அடுத்து தோழர்கள் சேதுராசன், சத்தியமூர்த்தி, அன்புரோசு ஆகியோர் இன்றைய அரசியலாரின் போக்கு குறித்தும், கழகத்தின் குறிக்கோள்களை விளக்கியும் பேசினர்,

பின், தோழர் என். சிவரத்தினம் கழகத்தின் சீரியகுறிக்கோள்களை விளக்கியதுடன், பொதுவுடைமையரின் போக்கைக் கண்டித்தார்.

அடுத்த தோழர் எஸ். எஸ். தென்னரசு பேசுகையில், இன்றைய ஆளவந்தார்களின் போக்கையும், தென்னகத்தை வடநாட்டுக்கு அடிமைப்படுத்த எண்ணும் நயவஞ்சகர்களின் சூழ்ச்சிகளையும் கண்டித்தார்.

அடுத்து, எதிர்பாராத வகையில் கூட்டத்தில் கலந்துகொண்ட மதுரைத் தோழர் எஸ். முத்து அவர்கள் பேசுகையில், காங்கிரஸ் பொதுச்செயலாளர் நமது கழகத்தினரை வகுப்புவாதிகள் என்று கூறியதை வன்மையாகக் கண்டித்து, யார் வகுப்புவாதிகள்—சாதியுணர்ச்சியைத் தூண்டுபவர்கள், சாதிப் பட்டத்தை விடாமல் வைத்திருப்பவர்கள் வகுப்புவாதிகளா, அல்லது சாதியே கூடாது என்று கூறும் தி. மு. கழகத்தினர் வகுப்புவாதிகளா என்ற வினாக்களை எழுப்பி, கழக இலட்சியங்களை விளக்கினார்.

இறுதியாகத் தோழர் மு. கருணாநிதி எம். எல். ஏ. அவர்கள், பலத்த கர ஒலிகளுக்கிடையே எழுந்து நம் கழக இலட்சியங்களை விளக்கியும், நேருவின் மட்டரகமான பேச்சுக்குப் பதில் தந்தும் டெல்லியின் ஓரவஞ்சனையை விளக்கியும், சென்னை மந்திரிகளின் போக்கைக் கண்டித்தும் பல ஆதாரங்களுடனும், புள்ளிவிவரங்களுடனும் நீண்டநேரம் உரை நிகழ்த்தினார்.

தோழர் கருணாநிதி அவர்களுக்கும், மற்ற பேச்சாளர்களுக்கும் அண்ணா படிப்பகம், நண்பர்கள் கழகம், நாவலர் படிப்பகம், 5-வது வட்ட தி.மு. கழகக் கிளை, பொது நல சீர்திருத்த மன்றம், பன்னீர் செல்வம் படிப்பகம், ரூபி சோடா கம்பெனி தொழிலாளர் ஆகியோர் சார்பில் கைத்தறி ஆடைகளும், மலர் மாலைகளும் சூட்டப்பட்டன.

பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் மணிவிழா நிதிக்காக தோழர் கருணாநிதியவர்களிடம் ரூ. 25 அளிக்கப்பட்டது.

தோழர் கோவிந்தராசன் ஆண் குழந்தைக்கு, கருணாநிதி அவர்களால் 'பாண்டியன்' எனப் பெயரிடப்பட்டது.

துவக்கத்தில் டேப்-இராதா மாணிக்கம் இன்னிசை வழங்கினார்.

நன்றி கூறலுடன் கூட்டம் இரவு 9-30 மணிக்கு முடிவுற்றது.

## இராசசிங்கமங்கலத்தில் அன்பழகன்

### விவசாயிகளின் குறைகளைக் கண்டறிந்தார்

இராசசிங்கமங்கலம், டிச. 10—

தோழர் க. அன்பழகன் எம்.எல்.ஏ. அவர்கள் 9—12—57 பகல் 12-30 மணியளவில் தேவகோட்டை நகரசபை உறுப்பினர் தோழர் இராம. வெள்ளையன் அவர்களுடன் இங்கு வந்து சேர்ந்தார்; அதுபோது, இராசசிங்கமங்கலம் ஊராட்சி மன்றத் துணைத் தலைவரும் பொதுக் குழு உறுப்பினருமான தோழர் நவமார்க்கண்டேயன், செயலாளர் அ. சுப்பையா ஆகியோர் இவ்வட்டார விவசாயப் பெருங்குடி மக்களின் சார்பில், 'மகஜர்' ஒன்றைத் தந்தனர்.

"சென்னை மாநிலத்திலேயே இரண்டாவது தகுதி படைத்த இராசசிங்கமங்கலம் கண்மாய் சுமார் 16 மைல் நீளம் உள்ள கரையை உடையது. கடந்த புயல் வெள்ளத்தினால் கண்மாயின் வடக்கில் சுமார் 7 மைல் தொலைவிலுள்ள தெத்தின் கரை பாவி, பல உடைப்புகள் கண்டது. சர்க்கார் மராமத்து செய்யும் காலத்தில் உள் விவசாயிகள் சிலரின் தடையால் பாதி கட்டியும் கட்டாமலும் இருப்பதால், தண்ணீர் போதுமான அளவு கட்ட முடியாமல், விவசாயம் செய்வதும் பஞ்சம் ஏற்படும் நிலை ஏற்படுகிறது; இதனைப் பலமுறை அதிகாரிகளிடமும் மந்திரிகளிடமும் நேரிலும், 'மகஜர்' மூலமாகவும் எடுத்துச் சொல்லியும் கவனிக்கப்படாமல் இருந்துவருகிறது.

"இந்தக் கண்மாயில் சரியான முறையில் நீர் தேக்கினால் சுமார் 13,000 ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதி கிடைப்பதுடன், சிறிய கண்மாய்களுக்கும் தண்ணீர் விநியோகிக்கமுடியும். ஆட்சியாளர்களின் கவனக்குறைவால் 16 மைல் நீளமுள்ள கண்மாயில் 4 அடி தண்ணீர்கூடக் கட்டமுடியாது விவசாயப் பெருமக்கள் மிக கவலை தோய்ந்த முகத்துடன் இருக்கிறார்கள்" என்று அந்த 'மகஜரில்' குறிப்பிட்டிருந்தனர்.

தோழர் க. அன்பழகன் அவர்கள் வயிற்றுவலியால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தும் விவசாயப் பெருமக்களின் வேண்டுகோளுக்கிணங்கவும், தானும் மேற்கண்ட குறைபாடுகளைக் காணும் நோக்குடனும் கண்மாயைப் பார்வையிட விரும்பினார்கள்.

அதன்பின் இராசசிங்கமங்கலம் ஊராட்சி மன்றத் தலைவர் ஜனாப் மு. கா. கா. செய்யது இபுராகிம் சாகிபு ராவுத்தர், துணைத் தலைவர் தோழர் நவமார்க்கண்டேயன், ஆசூர் வி. வீரப்பன், தேவகோட்டை நகரசபை உறுப்பினர் தோழர் இரா. வெள்ளையன் ஆகியவர்களுடன் 7 மைல் தொலைவில் உள்ள சண்மாயின் கலுங்கு, தெத்து (சருக்கை) முதலியவைகளைப் பார்வையிட்டார்; சந்தேகங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டு மாலை 5 மணியளவில் இராசசிங்கமங்கலம் திரும்பினார்கள்.

விவசாய மக்களின் சார்பாகச் சென்ற ஊராட்சிமன்றத் தலைவர், துணைத் தலைவர் ஆகியவர்களிடம் அன்பழகன் அவர்கள், சட்ட மன்றத்தில் சென்னை மந்திரிகளின் கவனத்திற்கு இதைக் கொண்டு வருவதாகவும், தன்னால் இயன்றளவு உதவி செய்வதாகவும் கூறினார்.

### பொதுக்கூட்டம்

மாலை 6 மணிக்கு, தி.மு. கழகச் சார்பில் பொதுக்கூட்டம் தோழர் இராம. வெள்ளையன் தலைமையில் துவங்கியது.

தோழர் அன்பழகன் அவர்கள் பேச எழுந்ததும் பல கிளைகள்—மன்றங்களின் சார்பில் கைத்தறி ஆடைகள் அணிவிக்கப்பட்டன.

பின்னர், அன்பழகன் அவர்கள் சட்டமன்ற நிகழ்ச்சிகளை விளக்கி கம்யூனிஸ்டுகளின் சுயநலப் போக்கை அம்பலப்படுத்தினார்; ஆனால் அன்பழகன் அவர்களுக்கு வயிற்றுவலி நோய் அதிகப்பட்டு தொடர்ந்துபேசமுடியாதநிலை ஏற்பட்டு, 'இன்னும் இரண்டு மூன்று மாதம் கழித்து உங்கள் ஆவலைப் பூர்த்தி செய்ய பொதுக் கூட்டத்திற்கு வருகிறேன்' என்று உறுதிகூறி விடைபெற்றார்.

(ந. கி)

## ஜனநாயக சோஷலிசக் கொள்கைகள்

### இனி பரப்புவதற்கு முடிவாம்

புதுடில்லி, டிச. 24—

சோஷலிசக் கொள்கைகளைப் பரப்புவதற்கு இன்னும் தீவிர நடவடிக்கைகள் காணப்படவில்லையாம்; பண்டித நேருவுக்குப் பிறகு என்ன ஆகுமோ என்று அஞ்சுகின்றனர் காங்கிரசார்; எனவே, அவர் வாழ்நாளிலேயே சோஷலிசக் கொள்கைகளைப் பரப்புவதற்கு, காங்கிரஸ்காரர்களில் 35 பேர்களைப் பொறுக்கி எடுத்து, ஒரு தனிக் குழு அமைக்க முடிவு செய்யப்பட்டுள்ளதாம்.

## அந்தமானில் வாழும் மக்களுக்குக் கடன்வசதி

### மாநிலங்கள் சபையில் தகவல்

புதுடில்லி, டிச. 22—

"சென்ற போரில் பாதிக்கப்பட்ட அந்தமானில் வாழும் 258 பேருக்கு இதுவரை சுமார் ரூ $1\frac{1}{2}$ இலட்சம் வழங்கப்பட்டிருக்கிறது" என்று மாநிலங்கள் சபையில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

அந்தமான் தீவிலுள்ள அதிகாரிகளுக்கு இதுவரை 1,970 விண்ணப்பங்கள் வந்துள்ளன என்றும், தனிப்பட்டவர்களுக்கு அனுமதிக்கப்படும் அதிகக் கடன் தொகை ரூ. 3,000 என்றும் தகவல் தரப்பட்டது.

★★★★★★-★★★★-★★★★★★★-★★★★-★★★★★★★★★★★★★★★

## முரண்பாடல்ல-ஒருமைப்பாடுதான்!

தடுப்புக்காவல் சட்டத்தை நீடிப்பதற்காக மத்திய உள் விவகார அமைச்சர் பண்டித பந்த், மக்கள் சபையில், திராவிடர் கழகத்தின் கிளர்ச்சியையும், இராமநாதபுரம் சம்பவங்களையும் காரணமாகக் காட்டியபோது, கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் டாங்கே, பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"ஆளும் கட்சிக்குப் பிடிக்காத சிலவற்றிற்காகப் பெரும்பான்மையான மக்களின் உள்ளக்கிடக்கையை ஒடுக்கவே இந்தச் சட்டம் நீடிக்கப்படுகிறது.

"காந்தியார் பட எரிப்பை சட்ட விரோதமாக்குவது போன்றவற்றை ஆராய்ந்துபாருங்கள்; மகாத்மா காந்தி உயிருடன் இருந்திருந்தால், சட்ட மன்றத்தில் இயற்றப்படும் சட்டத்தின் துணை கொண்டு பாதுகாப்பு விரும்புவாரா? 'யாருக்காவது என் படம் பிடிக்கவில்லை என்றால், கொளுத்தட்டும்; அதனால் நஷ்டமில்லை' என்றல்லவா கூறியிருப்பார்? காந்தியாரின் பக்தர்கள் அவருடைய படத்தைக் காப்பாற்ற விரும்பினால், படத்திற்குச் சட்டம் போட்டு கௌரவிக்கட்டும்; அதை விட்டு, காந்தியார் படத்தையும், மூன்று நாட்களுக்கு ஒருமுறை திருத்தப்படும் அரசியல் சட்டத்தையும் பாதுகாக்கப் போலீசார் ஏன் போராட வேண்டும்?

"நமக்கு அரசியல் சட்டம் இருக்கட்டும்; ஆனால் அதை விரும்பாதவர்கள் எதிர்ப்பதற்காக—'நான் சட்டத்தை எரிக்கப்போகிறேன்' என்று கூறுவதற்கு எதிராக எந்த நாட்டிலாவது சட்டம் உண்டா? இவை எல்லாம்—காந்தியார் படத்தை எரிப்பதையும், அரசியல் சட்டப் புத்தகத்தைக் கொளுத்துவதையும் தவறென்றே வைத்துக் கொண்டாலும் — அவற்றை சட்டத்தால் தடுக்க நினைக்கக்கூடாது. மக்களிடம் சென்று நிலையை விளக்கி, இச்செய்கைகளெல்லாம் தவறு என அவர்கள் உணருமாறு செய்ய வேண்டும்."

★

தேசிய கௌரவ அவமதிப்புத் தடுப்புச் சட்டம் சென்னை சட்டமன்றத்தில் கொண்டுவரப்பட்டபோது, கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் பேசிய பேச்சின் ஒரு பகுதி இது:—

"இந்தச் சட்டம் வந்தது, அடக்குமுறை நடத்தவேண்டும் என்பதற்காக அல்ல; அவசியமேற்பட்டதால் வந்தது.

"அரசியல் சட்டமும், கொடியும் காங்கிரசினால் மட்டும் வந்தது அல்ல; அனைவரும் சேர்ந்து தேசியக் கொடியின்கீழ் நின்று தேச விடுதலைக்காகப் போராடியபோது, சுதந்தரம் வந்தால் என்னென்ன உரிமைகள் கிடைக்க வேண்டும் என்று மக்கள் விரும்பினார்களோ, அதுதான் அரசியல் சட்டத்தில் பிரதிபலிக்கிறது. ஆகவே, அது அனைவரின் சொத்து."

—'ஜனசக்தி': 12-11-57

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

# 'கிராக்கிப் படியை உயர்த்தாவிடில் வேலைநிறுத்தம் செய்வோம்'

## 'சர்க்காருக்கு மூன்றுமாத தவணை தருகிறேம்'

### தபால் ஊழியர் தலைவர் எச்சரிக்கை

மதுரை, டிச. 24—

"மூன்றுமாத காலத்திற்குள், கிராக்கிப் படியை கணிசமான அளவு அதிகரிக்காவிட்டால் ஊழியர்கள் ஒரு வேலைநிறுத்தத்தில் ஈடுபடவேண்டிய கட்டாயம் ஏற்படும்; அது ஒரு இறுதிப் போராட்டமாக இருக்கும்"

—என்று தபால் ஊழியர் சம்மேளனத் தலைவர் வி. ஜி. நால்வி இங்கு எச்சரித்திருக்கிறர்.

இரண்டாவது சம்பளக் கமிஷன் அறிவித்துள்ள இடைக்கால நிவாரணம்—மாதம் ரூ. 5—மிகக் குறைவானது என்றும் அவர் கூறினர்.

தாங்கள் எதிர்பார்த்ததில் பத்தில் ஒரு பகுதியைக்கூட கமிஷன் பூர்த்தி செய்யவில்லை என்றும் அவர் கண்டித்தார்.

"எனவே, ஊழியர்கள் இப்போதிருந்தே ஒரு போராட்டத்திற்குத் தயாராகவேண்டும்" என்றும் அவர் குறிப்பிட்டார்.

சர்க்காரின் பொருளாதாரக் கொள்கையைக் கண்டித்த அவர், 'சர்க்கார் இலாகாக்களில் பாழாக்கப்படுகிற பணத்தை மிச்சப்படுத்தினலே, ஊழியர்களுக்குக் கிராக்கிப் படியில் ரூ 15 உயர்வு தரமுடியும்' என்றும் அவர் கூறினர்.

## ஒழுக்கமும் நேர்மையும் குன்றி வருகின்றன!

### முன்னாள் நீதிபதி கருத்து

காசி, டிச. 25—

"கல்வி நிறுவனங்களில் ஒழுக்கம் குன்றி வருவதோடு, இந்திய அரசியல் அரங்கில் கீழ்த்தரமானகுணங்கள் நிரம்பக்காணப் படுகின்றன"

என்று, முன்னாள் தலைமை நீதிமன்றத் தலைமை நீதிபதி திரு பதஞ்சலி சாஸ்திரி, காசி பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

அவர் தொடர்ந்து பேசுகையில் "இந்தியா சுதந்திரம் பெற்ற இந்த 10 ஆண்டுக் காலத்தில், நாணயம், நேர்மை, பொதுப் பொறுப்புகள், சமூகக்கடமைகள், ஒழுக்கக் கோட்பாடுகள் நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வருகின்றன' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

"கல்வியின் தரம் குறைந்து வருவதுடன், ஒழுக்கமும் சீர்குலைந்து வருகிறது; இந்த நிலைமை பார்த்தால், நாம் எவ்வளவுதான் திட்டம் வகுத்தாலும், இலட்சிய சமுதாய அமைப்பு என்பது, கைக்கு எட்டாத கடிவாளம் போல் தூர விலகிவிடும்" என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

## முந்திரா நிறுவனத்தின் மற்ரெரு அவலட்சணம்

ஜோர்ஹத், டிச 26—

'முந்திரா' நிறுவனத்திற்கு ஆயுள் இன்ஷ்யூரன்சு நிறுவனம் ரூ $1\frac{1}{2}$ கோடி அளித்தது பற்றி மக்கள் சபையில் கண்டனம் தெரிவிக்கப்பட்டதுதெரிந்ததே. இந்த 'முந்திரா' நிறுவனம் பற்றி மற்ரெரு தகவலும் வெளியாகியிருக்கிறது.

'பிரம்மபுத்திரா தேயிலை நிறுவனம்' முந்திரா கூட்டைச் சேர்ந்ததாம். இந்த நிறுவனம் 1955ம் ஆண்டில் ஒரே பாங்கியில் மூன்று பெயர்களில் கணக்குகளை வைத்துக்கொண்டு கடன் பெற்றுவிட்ட தொகைக்கு வட்டியுடன் ரூ. 41 இலட்சம் தரவேண்டுமாம்.

கல்கத்தாவிலுள்ள லண்டன் ஈஸ்டர்ன் பாங்கி, இந்தத் தொகையை வசூலிக்க வழக்குத் தொடர்ந்துள்ளது.

## மீன் கிடைக்குமிடத்தைக் கண்டறியும் கருவி!

மாஸ்கோ, டிச. 26—

கடலில் எங்கெங்கு நிறைய மீன் கிடைக்கும் என்பதை விமானத்திலிருந்து 'டெலிவிஷன்' மூலம் கண்டறியும் புதிய கருவி ஒன்றை ரஷ்யா கண்டுபிடித்துள்ளது.

## விமானச் சாதனையில் மற்ரெரு திருப்பம்!

வாஷிங்டன், டிச. 25—

மணிக்கு 2,000 மைல் வேகத்தில் செல்லக்கூடிய எரிபொருள் வீசும் விமானம் ஒன்றை அமெரிக்கா உருவாக்கியுள்ளதாம். இந்த விமானம் நவீன ஜெட் விமானங்களைவிட சக்திவாய்ந்தனவாம்.

## வேலை தேடித் தரும் நிலையங்கள்

### அரசாங்க அலுவல்களுக்கும் ஆள் பொறுக்கியெடுக்கும்

புதுடில்லி, டிச. 25—

பொது ஊழியக் குழுவின் மூலமும், போட்டித் தேர்வு முறையிலும் வேலை வாய்ப்புகளுக்குத் தகுதியுள்ளவர்களைப் பொறுக்குவதுடன், வேலை தேடித்தரும் நிறுவனங்களின் மூலம் மற்ற வேலைகளுக்குத் தேவையான ஆட்களை எடுத்துக்கொள்ளவும் சென்னை அரசாங்கம் இசைந்துள்ளதென்றும், கேரளம், மைசூர் ஆகிய இரு மாநிலங்களும் இதேபோன்று இசைந்துள்ளதென்றும் மக்கள் சபையில், துணைத் தொழில் அமைச்சர் அபித் அலி தெரிவித்துள்ளார்.

மற்ற நிறுவனங்களும் வேலைக்கு வேண்டிய நபர்களை வேலை தேடித் தரும் நிறுவனத்தின் மூலம் தேர்ந்தெடுத்துகொள்ள வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்துள்ளதாம், மத்திய அரசாங்கம்!

## ஆந்திரத்தில் வேலை வாய்ப்பு அதிகரிப்புத் திட்டம்

விஜயவாடா, டிச. 25—

சுமார் 80 இலட்சம் முதல் ஒரு கோடி மக்களுக்கு வேலை வாய்ப்புகள் தேடித்தர திட்டக் குழு எண்ணியுள்ளதாம்; இருந்தும் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் தீர்ந்தபாடில்லையாம்.

பல்கலைக் கழக மானியக் குழுத் தலைவர் தேஷ்முக், விஜயவாடா கும்பகல கூட்டுறவு தொழில் நிறுவனத்தின் தீப்பெட்டித் தொழிற்சாலை கட்டிடத்தைத் திறந்துவைத்துப் பேசுகையில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

ஐதராபாத்தில் தீப்பெட்டி உற்பத்தித் தொழிலில் 800 பெண்கள் வேலை செய்கின்றனராம்.

கடந்த 7 மாத காலத்தில் 296 தொழிலாளர்கள் ரூ. 85000 மதிப்புள்ள 16,000 குரோஸ் தீப்பெட்டிகளைத் தயாரித்துள்ளனராம்; 12,000 குரோஸ் விற்பனையாகியுள்ளதாம். மாதாந்திர உற்பத்தி 25 குரோசிலிருந்து 200 குரோஸாக உயர்த்தப்பட்டுள்ளதாம்.

## ரஷ்யப் படை பலம் குறைக்கப்படக்கூடும்?

### விவசாயத்தில் ஈடுபடுத்தப்படுவர்?

மாஸ்கோ, டிச. 26—

ரஷ்யாவின் படைபலம் 3 இலட்சம் முதல் 5 இலட்சம் வரையில் குறைக்கப்படலாம் என்றும், அவர்கள் விவசாயத்தில் ஈடுபடுத்தப்படலாம் என்றும் மேற்கு நாடுகளில் கருத்து நிலவிவருகிறதாம்.

# தென்னாடு தொழிலபிவிருத்தித் துறையில் புறக்கணிக்கப்படவில்லையாம்!

## உரியதற்கும் அதிகமாகவே பங்கு ஒதுக்கப்பட்டிருக்கிறதாம்

### மந்திரி மொரார்ஜி தேசாயின் பச்சைப் புளுகு

மதுரை, டிச. 24—

தென்னாடு தொழிலபிவிருத்தித் துறையில் புறக்கணிக்கப்பட்டிருப்பதாக மதுரை—இராமநாதபுரம் வர்த்தகக் கழகத்தவர், மத்திய வர்த்தக மந்திரி மொரார்ஜி தேசாய்க்கு வரவேற்பு தந்தபோது வற்புறுத்திக் கூறினர்.

வரவேற்புக்குப் பதிலளிக்கும்போது மந்திரி தேசாய், 'கழகம் எழுப்புகிற குற்றச்சாட்டினை தான் ஏற்கமுடியாது என்றும், தொழிலபிவிருத்தித் துறையில் தென்னாடு கடந்த காலத்திலோ, இப்போதோ புறக்கணிக்கப்படவில்லை என்றும் கூறினாராம்!

முழுப் பூசணியை இலைச் சோற்றுக்குள் மறைத்துவிடமட்டும் அவர் முயற்சிக்கவில்லை; ஒரு படி மேலே சென்று தேசாய் கூறினாராம்.

"நீங்கள் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் முழுவதையும் ஒரு சேரக் கணக்கில் எடுத்துக்கொண்டு பார்ப்பீர்களேயானல், உங்களுக்கு நியாயமாக உரியதை விட அதிகமான பங்கு கிடைத்திருப்பதை நீங்கள் காணமுடியும் என்றும் மனம் துணிந்து புளுகியிருக்கிறார், மொரார்ஜி தேசாய்.

நெய்வேலி திட்டம் கைவிடப்படும் என்பது வெறும் வதந்தி என்றும் அவர் கூறியிருக்கிறார்.

## வடக்கே 32! தெற்கே 9!

### இரண்டாம் திட்டத்தில் பால் நிறுவனங்கள்

புதுடில்லி, டிச. 25—

"மக்களுக்கு சுத்தமான பால் அளிப்பதற்கான திட்டத்தின்கீழ் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் மொத்தம் 41 நகரங்களில் பால் நிறுவனங்கள் அமைக்கப்படும்" என்று, மக்கள் சபையில் உணவு அமைச்சர் ஜெயின் தெரிவித்துள்ளார்.

இந்த 41 நகரங்களில் வடமாநிலங்களில் 32 நகரங்களும், தென்னாட்டில் 9 நகரங்களும் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

தென்னாட்டில், சென்னை, புதுவை, திருவனந்தபுரம், பெங்களூர், பத்ராவதி, குண்டூர், ஐதராபாத், விசயவாடா, இராசமகேந்திரபுரம் ஆகிய ஒன்பது நகரங்கள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## புதுடில்லி இரயில்வே நிலையக் கட்டடம்

### சுமார் ரூ. 20-இலட்சம் செலவாகுமாம்

புதுடில்லி, டிச. 22—

புதுடில்லி இரயில்வே நிலையக் கட்டடத்துக்கு சுமார் ரூ 19,95,000 செலவாகுமென்று மதிப்பிடப்பட்டிருப்பதாக இரயில்வே துணை மந்திரி ஷா நவாஸ்கான், மக்கள் சபையில் தெரிவித்துள்ளார்.

அந்நிலையத்தைச் சுற்றியுள்ள 'யார்டை' ரூ. 10,55,000 செலவில் சீர்திருத்தியமைக்கும் வேலை முன்னேறி வருகிறதாம!

## நோட்டுகள் அச்சடிக்க புதிய அச்சகமாம்!

### இயந்திரங்கள் விலை மட்டும் சுமார் ரூ. 50 இலட்சமாம்!

புதுடில்லி, டிசு. 22—

நாசிக்கிலுள்ள 'இந்திய அரசாங்க இரகசிய அச்சகத்திற்கு அருகில் ரூபாய் நோட்டுகள் அச்சடிப்பதற்கான புதிய அச்சுக்கூடம் ஒன்றைக் கட்டுவதற்கான வேலைகள் துரிதமாக முன்னேறி வருகின்றன; இதற்காக நடப்பு ஆண்டு வரவு செலவுத் திட்டத்தில் ரூ 1,54,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது.

'இந்த அச்சகத்திற்கான இயந்திரங்களின் விலை சுமார் ரூ. 50-இலட்சமாக இருக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது" என்று மக்கள் சபையில் மத்திய நிதி அமைச்சர் கூறியுள்ளார்.

## கோட்சே மனு நிராகரிப்பு

புதுடில்லி, டிச. 25—

அண்ணல் காந்தியாரை சுட்டுக் கொன்ற குற்றத்திற்காக 15 ஆண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்ட கோபால் விநாயக கோட்சே, தான் அனுபவித்த சிறைத் தண்டனைக் காலத்துடன் நன்னடத்தை செய்யப்பட்ட காலத்தையும் சேர்த்தால், தனக்கு விதிக்கப்பட்ட தண்டனைக் காலம் முடிந்துவிட்டது என்றும், எனவே தன்னை விடுவிக்கவேண்டும் என்றும் பிரதம நீதிமன்றத்தில் செய்துக்கொண்ட மனு, விசாரணைக்குப் பிறகு நிராகரிக்கப்பட்டுளளது.

## அண்ணா வேண்டுகோள்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இறக்கிக்கொள்ள மாட்டோம்; அது நலலதல்ல—யாருக்குமே நலலதல்ல!

"பார்ப்பனர்கள் இந்த நாட்டில் ஆதிக்கம் தேடுகிறர்கள்; இதை இல்லையென்பார் இல்லை.

"பார்ப்பனர்கள் தங்களின நன்மையைக் கருதி' தங்களின் மனப்போக்கை — கீழ்த்தரமான எண்ணத்தை விட்டொழிக்க வேண்டும என்று கேட்டுக்கொள்கிறேன்."

## உணவுத் தானியக் கட்டுப்பாடு அமுல்

### பறிமுதல் செய்யும் அதிகாரம் வழங்கப்படுகிறது

பெங்களூர், டிச. 25—

உணவுத் தானிய சேமிப்புக் கட்டுப்பாடு உத்தரவு மைசூர் மாநிலத்திலும் அமுலாக்கப்பட்டுள்ளது.

இந்த உத்தரவின்கீழ் அரிசி, நெல், உமி கலந்த அரிசி கட்டுப்படுத்தப்படுகின்றன.

உணவுத் தானிய வாணிபத்தில் ஈடுபட்டுள்ள எந்த வியாபாரியும் 150 இம்பீரியல் மணங்குக்கு அதிகமாக சேமித்துவைப்பதற்கு இதன் மூலம் தடை விதிக்கப்பட்டுள்ளது.

அதிகப்படியான அளவை பறிமுதல் செய்ய அதிகாரிகளுக்கு அதிகாரமளிக்கப்பட்டுள்ளது.

## அமெரிக்க நாட்டிற்கு ஏற்றுமதி—இறக்குமதி

### ஒரு புள்ளி விவரம்

புதுடில்லி, டிச. 24—

இந்தியாவிலிருந்து, அமெரிக்காவுக்குச் செல்லும் ஏற்றுமதியின் மொத்த மதிப்பு குறையவில்லையாம்!

அமெரிக்காவுக்கு ஏற்றுமதியான பொருள்களின் மொத்த மதிப்பு 1956—57-ல் ரூ 90 73 கோடி; 1955—56-ல் ரூ. 87 12 கோடி; 1954—55-ல் ரூ 89·23 கோடி ஆகும்.

அந்நாட்டிலிருந்து இறக்குமதியான பொருள்களின் மொத்த மதிப்பு 1956 –57-ல் ரூ. 105 26 கோடி; 1955—56-ல் ரூ. 89 3 கோடி; 1954—55-ல் ரூ. 82 22 கோடியாகும் என்று, மக்கள் சபையில் தகவல் தரப்பட்டிருக்கிறது.

## இலங்கையில் மக்கள் தொகை அதிகரிக்கிறதாம்!

கொழும்பு, டிச. 25—

இலங்கையின் மக்கள் தொகை 90 40,000 என்று 1956'ம் ஆண்டின் புள்ளிவிவரம் மூலம் தெரிய வருகிறது.

1956-ல் மட்டும் 2,19,000 ஆகவும், 1955-ல் 2,07,000 ஆகவும் மக்கள் தொகை அதிகரித்ததாம்.

சென்ற 5 ஆண்டுகளில் இறப்பு எண்ணிக்கை, பிறப்பு எண்ணிக்கையைவிடக் குறைவாக இருந்து வந்துள்ளதாம்.

71·4 சத விகிதத்தினர் சிங்களவர் என்றும், 11·1 சத விகிதத்தினர் இலங்கைத் தமிழர் என்றும், 10 8 சத விகிதத்தினர் இந்திய வம்சாவழியினர் என்றும், 0·05 விகிதத்தினர் ஐரோப்பியர் என்றும் தனித்தனியாக மதிப்பிடப்பட்டுள்ளது.

# பேராசிரியர் அன்பழகன் இலங்கை செல்ல 'பாஸ்போர்ட்' இல்லை!

28, 29—12—57ல் இலங்கை தி. மு. க. சார்பில யாழ்ப்பாணத்தில் நடைபெறும் சமூக சீர்திருத்த மாநாட்டில் பங்கு கொள்ள பேராசிரியர் க. அன்பழகன அவர்கள் அழைக்கப்பட்டிருந்தார்.

அவரும் செல்ல இசைந்து, இருபது நாட்களுக்கு முன்னரே விண்ணப்பத்திருந்தும், சென்னை போலீஸ் இலாகாவினர், இரகசியப் போலீசாரின் மூலம் விசாரணை முடிந்து, ரீஜனல் பாஸ்போர்ட் ஆபீசுக்கு பத்து நாட்கள் முன்னரே அனுப்பிவைத்தும், இந்திய மத்திய அரசின் நேரடிப் பார்வையில உள்ள அந்த அலுவலகத் தலைவரை அவர் நேரே சென்று கேட்டதில், நீங்கள் பேசுவதற்கென்று, ஒரு மாநாட்டிற்குச் செல்வதற்காக விண்ணப்பித்துள்ளதால் 'டில்லி'க்கு எழுதி அவர்கள் ஆணை மீதே பாஸ்போர்ட் அளிக்க முடியுமென்றும், அது இந்த வாரத்திற்குள் கிடைக்காதென்றும், பொதுவாகவே மாநாடுகளுக்குச் செல்வதற்கு உடனடியான பதில் தரப்படுவதில்லை என்றும் கூறிவிட்டார். (ந-கி.)

# வரலாற்று உண்மையை ஒப்புகிறர் மத்திய மந்திரி

"இந்தியா முழுமைக்குமாக. இப்போதுதான் முதல் முதல்ாக ஒரே சர்க்கார் அமைந்திருக்கிறது; இந்தியா முழுவதும், இப்போதுதான் ஒரே சர்க்காரின்கீழ் கொண்டுவரப்பட்டிருக்கிறது"

என்ற உண்மையை, மதுரை நகரசபை தனக்களித்த வரவேற்புக்குப் பதிலளிக்கையில், மத்திய மந்திரி மொரார்ஜி தேசாய் ஒப்பியிருக்கிறர்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. செழியன் எம். ஏ.

